# மனிதரைக் கண்டு கொண்டேன்



கவியரசர்

**முடியரசன்**

முதல் பதிப்பு : ஆகஸ்ட், 2005
திருவள்ளுவர் ஆண்டு : 2036


**விலை : ரூ. 20.00**

மணிவாசகர் வெளியீட்டு எண் : 1190



**நினைவில் வாழும்**
**நிறுவனர்**
**ச. மெய்யப்பனார்**

டாக்டர் ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

**'வள்ளுவம்'** இதழின் நிறுவன ஆசிரியர்.

குன்றக்குடி அடிகளார் **'தமிழவேள்'** என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் **'செந்தமிழ்க் காவலர்'** என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

**'பதிப்புச்செம்மல்'** என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

கிடைக்குமிடம் :

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம்- 608001. ✆:230069
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-600108. ✆:25361039
5, சிங்காரவேலு தெரு, தி. நகர், சென்னை-600017. ✆:24357832
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001. ✆:2622853
15, ராஜ வீதி, கோயமுத்தூர்-641001. ✆:2397155
28, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002. ✆:2706450

---

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை – 600 021
தொலைபேசி : 25954528



கவியரசர்

முடியரசன்

7-10-1920 - 3-12-1998

# முன்னுரை

என் தந்தையார் கவியரசர் முடியரசனார் அவர்களின் இயற்கையடைவிற்கு முன்பிருந்தே, நூல் வடிவில் வெளிவராத அவரின் கவிதைகளைப் பல நூல்களாக நானே பதிப்பித்து வெளியிட எண்ணி, அவரது கவிதைகளைத் தேடி எடுத்துத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டிருந்தேன். என் தந்தை நெடுங்காலமாக உடல் நலிவுற்று படுக்கையில் இருந்தமையால், தொகுப்பிற்கான சரியான அறிவுரைகளை அவரிடமிருந்து என்னால் பெற இயலவில்லை. இதனால் நூல் வெளியீடுகள் காலத்தாழ்வாகிக் கொண்டே யிருந்தன. இந்நிலையில் என் தந்தையை இயற்கை கொண்டு சென்றது.

பின் மீண்டும் நான் தொகுப்புப் பணியில் ஈடுபட்டேன். அப்பொழுது, "மனிதரைக் கண்டு கொண்டேன்" என்ற தலைப்பில் நூலொன்றைத் தொகுத்திருப்பதாக, என் தந்தை 'முன்னுரை' மட்டும் எழுதி வைத்திருந்த ஒரு தாள் மட்டும் என் கைக்குக் கிடைத்தது. அம்முன்னுரை இதோ:

## 'மனிதரைக் கண்டுகொண்டேன்'

*"குமுகாயத்திற் குறைகள் மலிந்து விட்டன. பண்பாடுகள் நலிந்து விட்டன. அந்நிலையைக் காணும் பொழுதெல்லாம் நெஞ்சம் குமுறுவதுண்டு; பொறுமுவதுண்டு; புழுங்குவதுண்டு. அந்த வேதனைகளில் வெடித்துக் கிளம்பிய பாடல்களைத் தொகுத்து, 'மனிதனைத் தேடுகிறேன்' என்ற தலைப்பில் ஒரு நூலாக்கினேன்.*

*20.2.81-இல் மதுரைப் பாத்திமா கல்லூரிப் பாட்டரங்கில் தலைமையேற்றுச் சிறிது நேரம் பேசியமர்ந்ததும் குளிர் காய்ச்சலால் தாக்குண்டேன். அவ்வமயம் முதல்வரும் பேராசிரியர்களும் காட்டிய பரிவுணர்ச்சி என்னுளத்தை நெகிழ வைத்து விட்டது.*

*பண்பாடுகள் வாடிவிட்டன; உண்மைதான். எனினும் ஆணிவேர், அற்றுவிடாமல் அங்கங்கே கிளை வேர்களை விட்டுக் கொண்டுதானிருக்கிறது என்ற ஓர் உணர்வு தோன்றியது. அதனால் குறைகளை மட்டுமே சுட்டிக்காட்டாமல் நிறைகளையும் எடுத்துக் காட்ட வேண்டும் என்ற ஆர்வம் அன்று அரும்பியது. ஆதலின் ஆங்காங்கே தம்மாலான நற்பணிகள் ஆற்றிவரும் மாந்தரை - நாட்டுக்கு, மொழிக்கு, மக்களுக்கு ஒல்லும் வகையால் உழைப்பினை நல்கும் நல்லோரை- ஆன்று அவிந்து, அடங்கிய கொள்கைச் சான்றோரைக் கண்டு, மகிழ்ந்து பாடிய பாடல்களைத் தொகுத்து, 'மனிதரைக் கண்டு கொண்டேன்' என்ற தலைப்பில் ஒரு நூலாக்கினேன்.*

*குறைகளைச் சுட்டிக் காட்டித் திருத்த முயல்வது ஒருமுறை. நிறைகளை எடுத்துக் காட்டி ஆர்வமூட்டி நெறிப்படுத்துவது மற்றொரு முறையாகும். அதனால், தனி மனிதரைப் புகழ்வது என் நோக்கமன்று. தன்னலம் தவிர்த்து பொது நல நோக்கு ஓரளவு காணப்படினும் அவர்களைப் பாடியிருக்கிறேன். வளருங் குமுகாயத்திற்கு வழிகாட்டும் என்ற நம்பிக்கைதான். வேறொன்றுமில்லை."*

அன்பன்

**முடியரசன்**

மேற்கண்ட 'முன்னுரை' எழுதப்பட்ட தாள் மட்டும்தான் கிடைத்ததே தவிர, அதில் குறிப்பிட்ட கவிதைகள் கிடைக்கவில்லை. அவை எவையென்றும் தெரியவில்லை.

இந்நிலையில் எந்தையின் ஆசைப்படி 'மனிதரைக் கண்டு கொண்டேன்' என்ற தலைப்பில் நூலொன்று தொகுக்க எண்ணி, மேற்கண்ட எந்தையின் முன்னுரையில் குறிப்பிட்ட படியான மொழி, மக்கள், நாட்டுக்குத் தொண்டாற்றிய மாந்தர் பற்றி, என் தந்தை பாடிய பாடல்கள் ஒரு சிலவற்றை நான் தொகுத்து இந்நூலிற் கொடுத்துள்ளேன்.

கவிஞர் காட்டிய சிறந்த மாந்தரைக் கண்டு கொள்ள உதவிய மணிவாசகர் பதிப்பகத்தார்க்கு என் நன்றி.

'முடியரசன் குடில்', அன்பன்
மனை எண் : 569, சூடாமணி நகர், **மு. பாரி**
காரைக்குடி - 630 003

# புகழ் மாலை

கவிஞன் யார்?... என்பதற்கு எடுத்துக்காட்டுத்தானய்யா;
பகுத்தறிவுக் கவிஞர் முடியரசனய்யா....

– தந்தை பெரியார்

திராவிட நாட்டின் வானம்பாடி கவிஞர் முடியரசன்....

– பேரறிஞர் அண்ணா

எனக்குப்பிறகு கவிஞன்.... முடியரசன்.....

– புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

தன்மானக்குன்றம்- கொள்கை மாறாச்சிங்கம்-திராவிட இயக்கத்தின் முன்னோடிக்கவிஞர் - திராவிட இயக்கத்தின் ஈடு இணையற்ற தளகார்த்தர்களில் ஒருவர் - 1940க்குப் பின்னால் திராவிட இயக்கத்தின் சார்பில் நாற்பதுக்கு மேற்பட்ட இதழ்களில் கொள்கை முழக்கம் செய்தவர் கவிஞர் முடியரசன். இன்று திராவிட இயக்கம் நிமிர்ந்து நின்று கோலோச்சுகிற தென்றால்.... அன்று முடியரசனார் ஆற்றிய இலக்கியப் பணியும் காரணம்....

– கலைஞர் மு. கருணாநிதி

கவிஞர் என்றால் இப்படித்தான் வாழவேண்டும் என்று முடியரசனார் அவர்களின் வாழ்க்கையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்

– மக்கள் திலகம் எம். ஜி. ஆர்

சாதி ஒழிய வேண்டும் எனக் கவிதையிலும், மேடையிலும் முழங்கிய கவிஞர்களுள், அவற்றைத் தன் வாழ்வில் கடைப்பிடித்தவர், கவிஞர் முடியரசனார் தவிர வேறு யாராவது இருக்கிறார்களா? எனத் தெரியவில்லை....

– தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வாதிகளுள் இணையற்றவர் கவியரசர் முடியரசனார்...

– முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம்.

பாரதியார் என்ற வித்திலிருந்து முளைத்தது பாரதிதாசன் என்ற செடி. அச்செடியில் தழைத்தது முடியரசன் என்ற கொடி....

அவர் இயற்றிய கவிதை நூல்கள் ஒவ்வொன்றும் தமிழுக்கு ஆக்கம் செய்யும் செம்மொழிச் செல்வமாகும். தன்மானச் சுடராக - கவிஞர்களிடையே ஓர் முடிசூடா மன்னராகத் திகழ்ந்தவர் கவியரசர் முடியரசனார்.

– பேராசிரியர் க. அன்பழகன்

வேத்தவைப் பாவலரும் வேற்று மொழிகலக்குந்
தீத்திறக் காலை தெளிமருந்தே – மூத்த
முடியரச ரின்றி மொழிவனப்புச் செய்யும்
முடியரசன் செய்யுள் முறை.

– மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்

பாடப் பிறந்த பழஞ்சபை மாணவன்
மூடப் பழக்கஞ் சாடிய பாவலன் .........
இலக்கியம் நிலமா இலக்கணம் அரணாக்
கவிதை கோலாக் கற்பனை கொடியா
வெல்க தமிழெனும் விறற்கொடி பொறியா
யாப்புப் படையா நல்லணி துணையாப்
புரட்சி முரசாப் புதுமை துடியாத்
தமிழை இகழ்வார் தன்னுயிர்ப் பகையா
அல்மொழி திணிப்பார் வல்வர வெதிர்த்துத்
தொடுமொழிப் போரில் தும்பை சூடியோன்
மொழியர சோச்சும் முதல்முடி யரசன்
குடியரசு போற்றுங் கொள்கை யோனே

– முனைவர் வ.சுப. மாணிக்கனார்

முடியரசர் இவரென்றால் மக்களெங்கே?
முன்னோடும் பரி எங்கே? படைக ளெங்கே?
முடிஎங்கே? அரசெங்கே? முரச மெங்கே?
மூத்தமிழில் ஒரு தமிழ்தான் முடியோ! மற்ற
இடைத்தமிழ்தான் அரசோ! மூன் றாவதான
எழிற்றமிழ்தான் முரசோ! ஓ! சரிதான் இந்த
முடியரசர் பாவரசர் பாடுகின்றார் நாம்
முழங்காலை நிலந்தாழ்த்தி வணங்கிக் கேட்போம்!

மும்முடியை ஓர் தலையில் முடித்த முடியரசர்
எம்முடியும் தலை வணங்கும் இயற்கையிலே கவிஞர்
தம்மரிய கவிதையினால் கவியரசர் ஆனார்
தாய்த் தமிழே! அவர் முடியை உனக்குத்தான் சாய்ப்பார்.

– கவிஞர் கண்ணதாசன்

இறைவனின் படைப்புகளில் சிகரம் போன்றவன் மனிதன். மனிதனின் படைப்புகளில் சிகரம் மொழி; மொழியின் சிகரம் கவிதை. அது மொழியின் பூரணப் பொலிவும்கூட தமிழ் இலக்கியம் நீண்ட மரபுடையது. மரபு வழுவாமல், புதுமைகளைப் புகுத்தி, தற்காலத் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்திய பெருமை மகாகவி பாரதியார் - பாவேந்தர் பாரதிதாசன் கவிதா மண்டலத்துக்கே உண்டு. இக் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த புதிய தலைமுறைக் கவிஞர்களில் முதலாவது இடத்தைப் பெற்றவர் கவிஞர் முடியரசன். "எனது மூத்த வழித்தோன்றல் முடியரசனே" என்று பாவேந்தராலேயே பாராட்டப் பெற்ற பெருமையுடையவர். ஆழ்ந்த புலமைமிக்க இக் கவிஞர் அழகும் இனிமையும் புதுமையும் கொஞ்சிக் குலவும் ஏராளமான கவிதைகளை எளிய நடையில் இயற்றித் தமிழுக்குப் புதிய அணிகலன்களைச் சூட்டியவர்.

பொதுவாக கவிஞர்களின் உள்ளம் தனித்தன்மை வாய்ந்தது. பார்வையும் தனி - கோணமும் தனி - உணர்வும் தனி - எல்லாமே தனி. அதனாலேயே, தனித்து நின்று இலக்கிய உலகுக்கு "தனி முத்திரை பதிந்த" கவிதைகளைக் கவிஞனால் வழங்க முடிகிறது. இலக்கியவாதிகளில் பத்தோடு பதினொன்றாகக் கவிஞனைக் கருத முடியாது. இலக்கிய உலகில் சிங்கம் போல உலவக் கூடியவர்கள் உண்மையான கவிஞர்கள். அந்த அபூர்வ இனத்தைச் சேர்ந்த கவிஞர் முடியரசன் எந்தச் சபலத்துக்கும் முடி சாய்க்காத ஆண்மையாளர். தமது கவிதைகள் மூலம் சமூக அநீதிகளை மனிதரிடையே பேதாபேதங்களைக் கற்பிக்கும் ஏற்பாடுகளை- குருட்டுப் பழக்க வழக்கங்களைச்சாடியவர். மனித நேயத்துக்கும் சமத்துவத்துக்கும் எதிரான கருத்துக்களை எதிர்த்து,

கவிதைகள் மூலம் ஓயாத அறிவுப் போர் நடத்தியவர். ஒப்புரவும் மனிதநேயமுமே தமிழரின் பண்பாடு என்பதைக் கவிதைகளால் முரசறைந்தவர், 'அரசவைக் கவிஞர்' என்ற பதவி மட்டும் இருந்திருக்குமானால் அதில் அமர்ந்து தமிழ் மொழிக்குப் பெருமை சேர்ப்பதற்கான தகுதிகள் அனைத்தும் உடையவர். அவருடைய மறைவின் மூலம் தமிழ் உலகம் ஓர் அபூர்வப் படைப்பாளியை இழந்து விட்டது. மரபு வழுவாமல் அதே சமத்தில் புதுமை பூத்த இனிய கவிதைகளைச் சொரிந்து வந்த தமிழ்ப் பொழில் மறைந்து விட்டது. அதிலும், உரைநடைக்கே கவிதை போல வேடமிட்டுக் காட்டும் 'நவீன கவிஞர்கள்' மலிந்துவரும் இக்காலத்தில் தரம்மிக்க மரபுக் கவிதைகளைக் காலத்தின் தேவைகளுக்கு ஈடு செய்யக்கூடிய வகையில் சுரந்து அளித்து வந்த செந்தமிழ் ஊற்று முடியரசன். தமிழுக்கு வளம் சேர்த்த அறிஞர்களின் படைப்புகளை அரசுடைமை ஆக்கும் சீரிய திட்டம் ஒன்றைத் தமிழக அரசு செயற்படுத்தி வருகிறது. அந்த வரிசையில் கவிஞர் முடியரசனின் படைப்புகளையும் அரசுடைமையாக்கிச் சிறப்பிப்பதன் மூலம் இந்த அற்புதக் கவிஞனுக்குத் தமிழ் மக்களின் உணர்வு பூர்வமான அஞ்சலியைப் பிரதிபலிக்க முடியும்.

- **'தினமணி'** நாளிதழ், முடியரசனார் மறைவிற்காக 'புதுமை பூத்த மரபுக் கவிஞர்' என்ற தலைப்பிட்டுத் தீட்டிய, 5–12–1998 தலையங்கம்.

# கவியரசர் முடியரசன் வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | துரைராசு |
| பெற்றோர் | : | சுப்புராயலு - சீதாலெட்சுமி |
| பிறந்த ஊர் | : | பெரியகுளம் |
| வாழ்ந்த ஊர் | : | காரைக்குடி |
| தோற்றம் | : | 7-10-1920 |
| இயற்கையடைவு | : | 3-12-1998 |
| கல்வி | : | பிரவேச பண்டிதம், மதுரைத் தமிழ் சங்கம் (1934-39) வித்துவான், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச்சிவபுரி (1939-43) |
| பணி | : | தமிழாசிரியர், முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி, சென்னை (1947-49), மீ.சு. உயர்நிலைப்பள்ளி, காரைக்குடி (1949-78) |
| திருமணம் | : | 2.2.1949 (கொள்கை வழிக் கலப்புத் திருமணம்) |
| துணைவியார் | : | கலைச்செல்வி |

| **மக்கள்** | **மருமக்கள்** | **பேரப்பிள்ளைகள்** |
|---|---|---|
| குமுதம் | பாண்டியன் | திருப்பாவை |
| பாரி | பூங்கோதை | ஓவியம் |
| அன்னம் | சற்குணம் | செழியன், இனியன் |
| குமணன் | தேன்மொழி | அமுதன், யாழிசை |
| செல்வம் | சுசீலா | கலைக்கோ, வெண்ணிலா |
| அல்லி | பாண்டியன் | முகிலன் |

# இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. முடியரசன் கவிதைகள் | (கவிதைத் தொகுதி) | 1954 |
| 2. காவியப் பாவை | (கவிதைத் தொகுதி) | 1955 |
| 3. கவியரங்கில் முடியரசன் | (கவிதைத் தொகுதி) | 1960 |
| 4. பாடுங்குயில் | (கவிதைத் தொகுதி) | 1983 |
| 5. நெஞ்சு பொறுக்கவில்லையே | (கவிதைத் தொகுதி) | 1985 |
| 6. மனிதனைத் தேடுகிறேன் | (கவிதைத் தொகுதி) | 1986 |
| 7. தமிழ் முழக்கம் | (கவிதைத் தொகுதி) | 1999 |
| 8. நெஞ்சிற் பூத்தவை | (கவிதைத் தொகுதி) | 1999 |
| 9. ஞாயிறும் திங்களும் | (கவிதைத் தொகுதி) | 1999 |
| 10. வள்ளுவர் கோட்டம் | (கவிதைத் தொகுதி) | 1999 |
| 11. புதியதொரு விதி செய்வோம் | (கவிதைத் தொகுதி) | 1999 |
| 12. தாய்மொழி காப்போம் | (கவிதைத் தொகுதி) | 2001 |
| 13. மனிதரைக்கண்டு கொண்டேன் | (கவிதைத் தொகுதி) | 2005 |
| 14. பூங்கொடி | (காப்பியம்) | 1964 |
| 15. வீர காவியம் | (காப்பியம்) | 1970 |
| 16. ஊன்றுகோல் | (காப்பியம்) | 1983 |
| 17. அன்புள்ள பாண்டியனுக்கு | (கடித இலக்கியம்) | 1999 |
| 18. இளவரசனுக்கு | (கடித இலக்கியம்) | 1999 |
| 19. எக்கோவின் காதல் | (சிறு கதைகள்) | 1999 |
| 20. எப்படி வளரும் தமிழ் | (கட்டுரை) | 2001 |
| 21. சீர்திருத்தச்செம்மல் வை.சு.சண்முகனார் | (கட்டுரை) | 1990 |
| 22. பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம் | (தன் வரலாறு) | |

# தேடிவந்த சிறப்புகள்

## (விருது/பட்டம்/பரிசு - வழங்கியது / இடம் - ஆண்டு)

- 'அழகின் சிரிப்பு' என்ற கவிதைக்கு முதல் பரிசு-பாவேந்தர் பாரதிதாசன், முத்தமிழ் மாநாடு, கோவை - 1950
- 'திராவிட நாட்டின் வானம்பாடி' பட்டம் -பேரறிஞர் அண்ணா - 1957
- 'கவியரசு' பட்டம் பொற்பதக்கம் - குன்றக்குடி அடிகளார், பாரி விழா, பறம்புமலை - 1966
- 'முடியரசன் கவிதைகள்' நூலுக்குப் பரிசு - தமிழ்நாடு அரசு - 1966
- 'வீர காவியம்' நூலுக்குப் பரிசு - தமிழ்நாடு அரசு - 1973
- 'நல்லாசிரியர்' விருது, வெள்ளிப் பதக்கம் - கே.கே.ஷா. ஆளுநர், தமிழ்நாடு அரசு - 1974
- 'சங்கப் புலவர்' பட்டம் - குன்றக்குடி அடிகளார் - 1974
- 'பாவரசர்' பட்டம், பொற்பேழை - மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், உலகத் தமிழ்க் கழகம், பெங்களூர் - 1979
- 'பொற்கிழி' - பாவாணர் தமிழ்க் குடும்பம், நெய்வேலி - 1979
- 'பொற்குவை' - ரூ. 10,000/-, மணிவிழா எடுப்பு - கவிஞரின் மாணாக்கர்கள், காரைக்குடி - 1979
- 'பொற்கிழி' - பாரதியார் நூற்றாண்டு விழாக் குழு, சிவகங்கை
- 'கவிப் பேரரசர்' பட்டம், பொற்கிழி ரூ. 10,000/- மணிவிழா எடுப்பு - கலைஞர் மு. கருணாநிதி, தி.மு.க மாநில இலக்கிய அணி, சென்னை - 1980
- 'தமிழ்ச் சான்றோர்' விருது, பதக்கம் - தமிழகப் புலவர் குழு, சேலம் - 1983

- 'கலைஞர் விருது' என்.டி. இராமாராவ், முன்னாள் ஆந்திர முதலமைச்சர், கலைஞர் மு. கருணாநிதி, தி.மு.க. முப்பெரும் விழா, சென்னை - 1988
- 'பாவேந்தர் விருது' (1987 க்குரியது) பொற்பதக்கம், கலைஞர் மு. கருணாநிதி, முதல்வர், தமிழ்நாடு அரசு, சென்னை - 1989
- 'பொற்கிழி' - விக்கிரமன், அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர், காரைக்குடி கவிஞர் இல்லம் - 1993
- 'பூங்கொடி' நூலுக்கு, இந்திராணி இலக்கியப் பரிசு ரூ. 5,000/- இந்திராணி அறக்கட்டளை, கரூர் - 1993
- 'சிறந்த தமிழ்த் தொண்டிற்கான' அரசர் முத்தையவேள் நினைவுப் பரிசில், வெள்ளிப்பேழை, பொற்குவை ரூ. 50,000/- அண்ணாமலை அரசர் நினைவு அறக்கட்டளை, சென்னை - 1993
- 'இராணா இலக்கிய விருது' பொற்குவை ரூ. 10,000/- தமிழ் இலக்கியப் பேரவை, ஈரோடு - 1994
- 'கல்வி உலகக் கவியரசு' விருது - அகில இந்தியப் பல்கலைக் கழகம் தமிழாசிரியர் மன்றம், காரைக்குடி - 1996 (அழகப்பா பல்கலைக் கழகம்)
- 'பொற்கிழி' - பழைய மாணவர் பாராட்டு விழா, கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மேலைச்சிவபுரி - 1997
- 'கலைமாமணி' விருது 'பொற்பதக்கம்' - செல்வி பாத்திமா பீவி, ஆளுநர், கலைஞர் மு. கருணாநிதி, முதலமைச்சர், தமிழ்நாடு அரசு, சென்னை - 1998

## பிற குறிப்புகள்

- இளம்பருவத்தில் இலக்கிய உணர்வை ஊட்டியவர் தாய்மாமன் துரைசாமி அவர்கள்.
- 20-ஆம் அகவை வரைக் கடவுளைப் பற்றிய கவிதைகள் இயற்றினார். அவை கிடைத்தில (1939)

- 21-ஆம் அகவை முதல் சமுதாயச் சூழல், மொழி, நாடு, இயற்கை இவற்றையே பாடி வந்தார் (1940)
- 21-ஆம் அகவையில் இயற்றிய 'சாதி என்பது நமக்கு ஏனோ?' என்ற கவிதையே முதல் முதலில் அச்சு வாகனம் ஏறியது. இது பேரறிஞர் அண்ணாவால் 'திராவிட நாடு' இதழில் வெளியிடப்பட்டது (1940)
- தந்தை பெரியாரின் தன்மான இயக்கத் தொடர்பு (1940)
- தன்மான இயக்கத் தொடர்பால் 'வித்துவான்' தேர்வில் தோல்வியுறுமாறு செய்யப்பட்டார் (1943)
- புதுவை மாநிலத்திற்கு அருகில் உள்ள மயிலத்தில் தலைமறைவாக இருந்து படித்து 'வித்துவான்' பட்டம் பெற்றார் (1947)
- நவாபு டி.எஸ். இராசமாணிக்கம் நாடகக் குழுவில் பாடல், உரையாடல் எழுதும் பணி. அங்கிருந்த 'சிறை வாழ்க்கை' யும், மதவழிபாட்டு முறைகளும் பிடிக்காமல் வெளியேறினார்.
- சென்னையில் தமிழாசிரியர் பணி - பல்வேறு இதழ்களில் இலக்கியப்பணி - 'பொன்னி' இதழில் பாரதிதாசன் பரம்பரைக் கவிஞராக அறிமுகம் - திராவிட இயக்கத் தலைவர்கள், தமிழறிஞர்களுடன் தொடர்பு (1947-49)
- தான் கொண்ட கொள்கைக்காக கைம்பெண் - கலப்புத் திருமணம் செய்து கொள்ளத் தாயாரிடம் வேண்டுதல். 'ஒரே மகன் என்பதால், அவ்வாறு செய்ய இயலாது" எனத் தாயார் மறுத்தல் (1948)
- 'சாதி மறுப்புத் திருமணம் செய்யவாவது இசைவு கொடுங்கள்' என அன்னையாரிடம் வேண்டுதல். பெற்றோர் இசைதல். பெற்றோர் மூலம் 'கலைச்செல்வி' எனும் நலத்தகையாரை பேராசிரியர் மயிலை சிவமுத்து தலைமையில் சாதி மறுப்புத் திருமணம் செய்து கொண்டார் (1949)
- திருமணமான ஆண்டே தமது துணைவியாருடன் இந்தி எதிர்ப்புப்போரில் பங்கேற்றார் (1949)

- கலப்பு மணத்தின் தேவையைப் பற்றிக் கவிதை பல பாடியதோடு இருந்து விடாமல் தாமும் கலப்புத் திருமணம் செய்துகொண்டு, தம் பிள்ளைகள் அனைவருக்கும் அவ்வாறே செய்வித்துத் தம் கொள்கைக்கு வெற்றி தேடித் தந்ததன் மூலம் 'அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்' என்னும் வள்ளுவர் வாக்கைத் தோல்வியுறச் செய்தார்.
- காரைக்குடியில் மீ.சு. உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியர் பணியேற்றார் (1949)
- 'முடியரசன் எனக்குப் பின் கவிஞன்' எனப் புரட்சிக்கவிஞர் பாரதிதாசனால் பாராட்டப் பெற்றார் (1950)
- குருதி உமிழும் கொடுநோய்க்கு இலக்காகி, புதுக்கோட்டைத் தமிழ்ப் புரவலர் அண்ணல் பு.அ. சுப்பிரமணியனார் அருட்கொடையால் உயிர்பிழைத்தார் (1955)
- மூன்றாவது மகவான ஆண் மகன் பிறத்தல், செய்ந் நன்றியின் பொருட்டு, தன்னுயிர் காத்த அண்ணல் சுப்பிரமணியனார் நினைவாக அம்மகனுக்கு 'சுப்பிரமணியன்' எனப் பெயரிட்டார் (1955)
- 'சுப்பிரமணியன்' என்ற அம்மகன் மறைவு. கவிஞர் பெருந்துயரம் அடைதல் (1959)
- சென்னை சென்று திரைப்படத்துறையில் ஈடுபட்டார். 'கண்ணாடி மாளிகை' என்ற திரைப்படத்திற்கு பாடல், உரையாடல் எழுதினார். திரைத்துறையின் சிறுமைகளைக் கண்டு வெறுப்புற்று தம் இயல்புக்கும், கொள்கைக்கும், அத்தொழில் சிறிதும் ஒத்து வராததால் திரைத் துறையிலிருந்து வெளியேறினார் (1961)
- மீண்டும் காரைக்குடியில் தமிழாசிரியர் பணி (1962)
- இந்தி எதிர்ப்புப் போரில் ஈடுபட்டதாகக் காவல் துறையினர் வழக்கு (1965)

- 'பூங்கொடி' நூலுக்குத் தமிழ்நாடு அரசு தடைசெய்ய ஏற்பாடு (1966), ஆட்சிமாற்றத்தால் 'பூங்கொடி' தடை ஏற்பாடு விலக்கம் (1967).
- தமிழாசிரியப் பணி ஓய்வு (1978)
- மதுரைப் பல்கலைக்கழகம் தமிழியற் புலத்தில் நாடகக் காப்பியப் பணி (1985)
- திராவிட நாடு, முரசொலி, முத்தாரம், குடியரசு, விடுதலை, போர்வாள், முல்லை, எழில், தென்றல், மன்றம், அழகு, முருகு, பொன்னி, குயில், கதிரவன், நம்நாடு, வாரச் செய்தி, பிரசண்ட விகடன், தமிழ்ப்பாவை, காதல், தாமரை, புதுவாழ்வு, தனியரசு, சங்கொலி, வாழ்வு, தோழன், திராவிடமணி, தமிழ்ச்சுவை, தமிழ், போர்முரசு, பாசறை, இன முரசு, இன முழக்கம், நித்திலக் குவியல், செந்தமிழ்ச் செல்வி, கலைக்கதிர், அமுத சுரபி, கழகக் குரல், மறவன் மடல், சமநீதி, உரிமை வேட்கை, தென்னரசு, தென்னகம், தமிழ் முரசு, தமிழ்நாடு, அலை ஓசை, தமிழ்நேசன் (மலேசியா) கவிதை, முல்லைச்சரம், தமிழரசு, குங்குமம், தினமணி கதிர், தினமணி ஆகிய இதழ்களிலும் மற்றும் பல்வேறு இதழ்களிலும் கவிஞர் தமது எழுத்தோவியங்களைத் தீட்டியுள்ளார்.
- கவிஞரது கவிதைகள் பல சாகித்திய அகாதமியால் இந்தியிலும், ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. கன்னடத்திலும், உருசிய மொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.
- கவிஞரது நூல்கள் பல்கலைக்கழகங்கள் பலவற்றில் பாடநூல்களாக வைக்கப்பட்டுள்ளன. பல்வேறு பல்கலைக் கழகங்களில் இவர்தம் நூல்கள் 'முனைவர்' மற்றும் 'எம்ஃபில்' பட்டத்திற்காகவும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

- 'பாவரசர் முடியரசனாரின் தமிழ்த்தொண்டு' என்ற ஆய்வு நூல் முனைவர் மு. இளங்கோவன் என்பவராலும், 'முடியரசன் படைப்புகள் ஓர் ஆய்வு' என்ற நூல் முனைவர் சிரீகுமார் என்பவராலும் 'பூங்கொடியும் மணிமேகலையும்' என்ற ஒப்பாய்வு நூல் முனைவர் மு. நிலாமணி என்பவராலும் எழுதப்பட்டு வெளிவந்துள்ளன.
- 'கவியரசர் முடியரசனார் முத்தமிழ் மன்றம்' என்னும் பெயரில் புலவர் தி.மு. அரசு மாணிக்கம் என்பார், ஈரோட்டில் மன்றம் அமைத்துத் தமிழ்த்தொண்டு செய்து வருகிறார். கும்பகோணத்தில், கவிஞர் இனியன் என்பாரால், 'கவியரசு முடியரசன் இலக்கிய மன்றம்' தமிழ்ப்பணி செய்து வருகிறது.
- கவிஞரது படைப்புகள் தமிழ்நாட்டரசால் நாட்டுடைமையாக்கப் பட்டுள்ளன.
- கவிஞரது வாழ்க்கை வரலாறு சாகித்திய அகாடமியால் வெளியிடப்பட உள்ளது.

## பெற்ற பாராட்டுகள்

பாவேந்தர் வழித்தோன்றல், புதுமைக் கவிஞர், கவி மா மன்னர், கவிச்சிங்கம், இருபதாம் நூற்றாண்டின் இமயக் கவிஞர், கவிதை இமயம், தமிழ்த்தவம் கொண்ட தலைமைக் கவிஞர், தமிழ்க் குடியரசின் பாட்டு முடியரசர், கவியுலக முடியரசர், சுயமரியாதைக் கவிஞர், தமிழிசைப் பாவலர்.

வள்ளுவர் நெறியில் வாழ்ந்தவர், சொல்லும் செயலும் ஒத்த வாழ்வினர், வறுமையிலும் செம்மை போற்றியவர், திமிர்ந்த ஞானச்செருக்குடைய சங்கப் புலவரனையர், சங்கத் தமிழனைய தூயவர், பீடுநடையினர், பெருமித வாழ்வினர், நிமிர்ந்த நடையினர், நேர் கொண்ட பார்வையர், அண்டிப்பிழையார். ஆர்த்தவாழ்வினர், ஒட்டார் பின் செல்லாதவர், நல்லாசிரியர், ஆசிரியர் போற்றுபவர், நன்றி மறவாதவர், நட்புப்பெரிதென வாழ்ந்தவர், பகுத்தறிவாளர், மனிதநேயர், பழகுதற்கினிய

பண்பாளர், பிறர்க்குதவும் ஏந்தல், சாதி தொலைத்தவர், சமயம் அறுத்தவர், பதவி வெறுத்தவர், சமத்துவம் விரும்பி, விளம்பரம் விரும்பார், எளிமை வாழ்வினர், புகழ்கண்டு கூசுவார். அன்பு நெஞ்சினர், குழந்தை உள்ளத்தினர், பூமனத்தினர், இனிமைப் பேச்சினர், இளமை விரும்பி, அமைதி விரும்பி, குறிக்கோள் வாழ்வினர்.

இடர்ப்பாடுகளும், இன்னல்களும் வந்தபோதும் கொண்ட கொள்கையிலிருந்து இறுதிவரை வழுவாமல் தடம்புரளாத் தங்கமாக, தன்மானச் சிங்கமாக, தமிழ் வேழமாக கொள்கைக் குன்றமாக வாழ்ந்தவர், பணம், பதவி, பட்டம், பகட்டுக்குப் பணியாமலும், அரசவைப் பதவிகள் நாடி வந்தபோது, அவைகளைப் புறக்கணித்தும் ‘வளையா முடியரசர்’ என்றும் ‘வணங்கா முடியரசர்’ என்றும் புகழ்பெற்றவர், தன்மானக் கொள்கையால், மைய, மாநில அரசின் பல அரிய விருதுகளை இழந்தவர். பல்லாயிரம் இளைஞர்களைத் தமிழ் உணர்வாளர்களாக்கியவர், கனவிலும் கவிதை பாடுபவர். பாட்டுலகில் பாரதியாரைப் பாட்டனாகவும், பாரதிதாசனைத் தந்தையாகவும் கருதிக் ‘‘குலமுறை கிளத்தும்’’ கொள்கையுடையவர். ‘தன்னை மறந்த லயம் தன்னில்’ இருக்கும் இயல்பினார்; எட்டியவரை சிந்திக்கும் இயல்பினால்.

**தமது வாழ்நாளில் இறுதியாக அவர் இயற்றிய கவிதை**

வாளால் பிளப்பினும் வாழ்நாள் இழப்பினும் வஞ்சமனக்
கேளார் குழுமிக் கெடுதிகள் சூழினும் பூமியில்வாழ்
நாளெலாம் வாட்டும் நலிவே உறினும் நற்றமிழே
ஆளாதல் திண்ணம் அடியேன் நினது மலரடிக்கே.

# உள்ளுறை

# தமிழ் வாழ்த்து

முழுமதியே! செந்தமிழே! .காலங் கண்டும்
மூவாத மலர்ப்பொழிலில் ஆடி வந்த
அழகொழுகும் இளமையிலே! உலக மாந்தர்
அகமனைத்தும் குளிர்விக்கும் தென்றற் காற்றே
பழகுசுவைக் கனிமூன்றும் சுவைத்துப் பார்த்துப்
பாடிவரும் பூங்குயிலே! எனது நெஞ்சில்
அழகுதவழ் தோகைவிரித் தாட வாவா!
அவ்வரங்கில் குரலெடுத்துப் பாட வாவா!

– 25.08.1979

# என்றும் வாழ்வர்

அள்ளிக் கொடுத்தவர் சாவதில்லை
அன்பு மனத்தவர் மாய்வதில்லை – அள்ளிக்

உள்ளம் மிகுத்தவர் வீழ்வதில்லை
ஓங்கு பெரும்புகழ் சாய்வதில்லை – அள்ளிக்

முல்லைக் கொடிக்கொரு தேர்கொடுத்தான் – **பாரி**
முத்தமிழ் வாணர்க்கோ ஊர்கொடுத்தான் – அள்ளிக்

சொல்லுந் தமிழ்க்குயர் வாழ்வளிக்கக் **குமணன்**
தூய தலைகொள வாள்கொடுத்தான் – அள்ளிக்

நெல்லிக் கனிக்கொரு பேரளித்தான் **அதியன்**
நீள்புகழ் அவ்வைக்கு வாழ்வளித்தான் – அள்ளிக்

கல்விப் பணிக்கெனச் சீர்கொடுத்தான் – **அழகன்**
கைப்பொருள் யாவையு மேகொடுத்தான் – அள்ளிக்

வள்ளல்க ளாமென வாழ்பவரை
மாய்ந்தனர் என்றிங்கு யாருரைத்தார்?

உள்ளம் இருப்பவர் யாவருமே
உலக வரைப்பினில் வாழ்ந்திடுவார்.

# தமிழ்த் தொண்டு

தமிழ்ப்புலவர் அரசியலில் வல்லா ருண்டா?
தகுதிமிகு செய்தித்தாள் நடத்த லுண்டா?
தமிழ்ப்புலவர் தொழிலாளர் இயக்கங் கண்டு
தலைமைபெறும் நிலையுண்டா? சிறையிற் பட்ட
தமிழ்ப்புலவர் முன்புண்டா? சமய வாதி
தன்கருத்தைப் பெரியார்முன் மொழிந்த துண்டா?
தமிழ்ப்புலவர் பொதுமைநெறி புதுமைப் போக்குச்
சார்ந்ததுண்டா? **திரு.வி.க** ஒருவர் உண்டு.

பன்மொழிகள் கற்றதனால் பான்மை கெட்டுப்
பைந்தமிழ்க்கோர் ஊறுசெய நினையா நெஞ்சர்;
தென்மொழியும் வடமொழியும் கரைகள் கண்டார்;
தீந்தமிழைச் செந்தமிழை உயிராக் கொண்டார்;
நன்மைதரும் உரைவல்லார்; சங்க நூலின்
நயம்பொழியும் நாவல்லார்; பூங்குன் றத்து
நன்மகனைப் **பண்டிதமா மணி**யை நெஞ்சால்
நாடிடுவோர் தமிழ்மொழிக்குத் தீங்கு செய்யார்.

நாவாழும் தமிழ்மொழிக்கே வாழ்வு வேண்டி
நயத்தக்க ஆய்வுரைகள் எழுதிக் காட்டித்
தீவாழும் நெஞ்சுடைய ஆரி யத்தின்
திரிபுரையைப் பகுத்தறிவால் மறுத்துக் காட்டிக்
கோவாக நம்முன்னே வீற்றி ருக்கும்
கொடுமீசை சிவந்தவிழி கருத்தமேனிப்
**பாவாணர்** படைத்தளித்த எழுத்த னைத்தும்
பசுந்தமிழுக் காணிவேர் ஆகி நிற்கும்.

மேவாத மனமுடையார் ஒன்று கூடி
மேலான எழுத்தாளர் என்று கூறிக்
காவாத நாவினராய் வீட்டுக் குள்ளே
கழறுகிற மொழியெல்லாம் எழுதி வைத்துச்
சாவாத இலக்கியமென் றியம்பிவந்த
சழக்கருக்கே முதலிடமென் றிருந்த நாளில்
மூவாத தமிழ்வளர வழிவ குத்த
**மு.வ.** வின் தமிழ்த்தொண்டே தலைநின் றோங்கும்.

அறிவியலைத் தமிழ்மொழியில் ஆக்க வேண்டி
அதற்கென்றே உழைத்துவரும் கோவை தந்த
பொறியியலில் வல்லார்கள் வெளிக்கொ ணர்ந்த
பொன்மலராம் **கலைக்கதிரி**ன் புதுமை காட்டும்
நெறிமுறையை நாமின்னும் உணர வில்லை;
நிலையான அவர்பணியை மதித்துப் போற்றின்
வருமுலகம் நமைவாழ்த்தும் புகழும் சேர்க்கும்
வளர்தமிழில் புதுமைகளும் மலர்ந்து நிற்கும்.

# அப்பரடிகள்

திருத்தலங்கள் பலசென்று, கசிந்து நின்று
திருவாயால் தேவாரம் பாடி வந்தார்;
உருக்குலைந்த இடமெல்லாம் தூய்மை செய்ய
உழவாரப் படையொன்று கையிற் கொண்டார்;
அருத்தியொரு ஞானப்பால் உண்ட வாயால்
அப்பரெனச் சம்பந்தன் அழைக்க நின்றார்;
திருத்தமுற நடையறாத் துறவு பூண்டார்;
**திருநாவுக் கரச**ரெனப் புகழும் பெற்றார்.

வெப்புறுத்திக் கடலுக்குள் கட்டி வீழ்த்தி,
வேதனைக்குள் தள்ளிடினும் கொள்கை மாறா
அப்பருக்குச் சமமாக ஒப்பு ரைக்க
ஆளில்லை; சமயங்கள் பலவுந் தோய்ந்து
தப்பறுக்கும் நிலையுணர்ந்த தரும சேனர்;
தவமுனிவர், வேளாளர், தகுதி மிக்கார்;
அப்பழுக்கே இல்லாத ஒழுக்க சீலர்;
அவர்கொண்ட தொண்டுள்ளம் வாழ்க வாழ்க.

# எழுத்து மலை

**10.6.1969**

தொழத்தகுநற் றமிழ்மொழியும் அதனோ டொத்த
தொன்மைமிகும் ஆரியமும் கற்றுத் தேர்ந்து
பழுத்தமலை; பண்புவளர் ஆங்கி லம்போற்
பலமொழிகள் பயின்றமலை; சான்றோர்நெஞ்சம்
வழுத்துமலை; வளர்ந்துயர்ந்த எழுத்து வல்லார்
வற்றாத அருவியெனத் தோன்றச் செய்த
எழுத்துமலைப் பெருமையெலாம் விண்டு ரைத்தல்
எளியதொரு செயலாமோ? அரிய தன்றோ?

அளக்கஒரு கருவியிலா அளவு கொண்டான்;
அலகில்பல பொருள்கொண்டான்; பகைவர் யாரும்
துளக்கரிய நிலைகொண்டான்; புகழால் ஓங்கித்
தொலைவிலுளார் அறியவளர் தோற்றங் கொண்டான்;
உளத்துறுநம் தமிழ்நினைவு வறந்த போதும்
உலகினர்க்கு வளந்தருநல் வண்மை கொண்டான்;
வளத்திலுயர் அம்மலையை மறைப்பான் வேண்டி
வஞ்சனையார் முயல்வரெனின் மதிதான் என்னே!

நாடகநூல், பாவகைநூல், ஆய்ந்து ரைத்த
நலமிகுநூல், அறிவியல்நூல், நுழைபு லத்தார்
நாடறிவு, நூல்பலவோ டுரைநூல், நெஞ்சம்
நயக்கின்ற நெடுங்கதைநூல் இன்னோரன்ன
பீடணையும் பெருநூல்கள் எழுதித் தந்த
பெருமலையாம் **மறைமலை**யின் எழுத்து வன்மை
நாடறியும் வீடறியும் நல்லோர் நெஞ்சம்
நன்கறியும்; அறியாதார் அறியா தாரே.

சமயமெனக் கடவுளெனப் பேர்கள் சொல்லித்
தழைத்துவரும் போலிகளைக் கடியும் கூர்வாள்;
தமிழரிடைப் படர்ந்துவரும் சாதித் தீமைச்
சழக்குகளை வேரொடுசுட் டெரிக்குஞ் செந்தீ;
இமயமலை தந்தபொது மொழியீ தென்றே
இந்திவரின் தடுத்தொழிக்கும் கேட யங்காண்;
நமதினத்தை விழிப்புறுத்தும் வெற்றிச் சங்கம்
நாளெல்லாம் அவனெழுதித் தந்த நூல்கள்.

'நக்கீரர் சிவஞான முனிவர் என்போர்
நாம்மகிழ ஒருருக்கொண் டிங்குத் தோன்றி
இக்காலை நற்றமிழை வளர்க்க வந்தார்,
இந்நாடு தனைமறந்து துயிலுங் காலை
எக்காளம் எடுத்தூதி விழிக்கச் செய்தார்
இவரென்று மண்முழங்கும் மரம்மு ழங்கும்
முக்காலும் ஈதுண்மை' என்று சான்றோர்
முழங்கினரேல் அவனெழுத்தின் பெருமை என்னே!

கல்லாதார் தமிழ்மொழியைக் கரைகண் டாற்போல்
கருதினராய் அயன்மொழிச்சொல் பலவுங் கூட்டி
இல்லாத வழுமொழியும் சிதைந்த சொல்லும்
எண்ணிறந்து குழப்பியதை எழுதிக் காட்டிப்
பொல்லாத செயல்புரிந்து தமிழின் தன்மை
புரியாத படிசெய்த இருட்டர் கூட்டம்
நில்லாது வெருண்டோட எழுந்து வந்த
நீள்கதிராம் மறைமலையைத் தொழுவோம் வாரீர்.

சான்றோர் - திரு.வி.க

# வாழிய தமிழ் முனிவர்

14–9–75

தாயைத் தந்தையைத் தம்முடன் பிறந்தார்
தோயும் அன்பைத் துறந்தனர் எனினும்
முப்பா லூட்டிய முத்தமிழ் அன்பினில்
தப்பா தொழுகுந் தவமுனி யவர்தாம்;
வீட்டுப் பற்றும் வேறுள பற்றும்
வீட்டுந் துறவறம் விழைந்தவர் எனினும்
நாட்டுப் பற்றினை நயந்திடுங் குறிக்கோள்
வேட்டுப் பணிசெயும் வியத்தகு தொண்டர்;
மனத்துப் பற்றினை விடுத்தனர் ஆகினும்
இனத்துப் பற்றோ டியங்கும் நடத்தையர்;
தம்மைத் தூற்றினும் தாம்பகை கொள்ளார்
எம்மவர் என்றே இனநலம் பேணுவர்;
கருத்து வேற்றுமை கருதில ராகிப்
பொறுத்துச் செல்லும் புன்னகை முகத்தினர்;
பன்னெறி யாளரும் பழகுதற் கேற்ற
நன்னெறி யாளர் நாநலம் மிக்கார்;
எளியோர்க் காணின் இரங்கும் நெஞ்சினர்
அளியால் பற்பல அறங்கள் புரிபவர்:

---

வீட்டும் - அழிக்கும்.

அருச்சனை ஒன்றே ஆண்டவன் அருளைப்
பெறத்தகு வழியெனல் பேணா ராகி,
உருக்குலைந் தொடுங்கிய உழைப்பினர்வாழத்
தெருத்தெரு வாகத் திரிவோர் உய்ய
வாழ்வின் துய்ப்பிலா வறியவர் நலம்பெறச்
சூழ்வதே ஆண்டவன் தொண்டெனத் தொடர்வார்;
திருமடம் ஒன்றே உறைவிடம் என்று
கருவறைப் புகுந்து காலங் கழியார்
ஊர்தொறும் ஊர்தொறும் ஓயா தோடிச்
சீர்பெறும் சிந்தனை செப்பிடும் பணியினர்;
சமயம் சார்தரு குறைகளைச் சாடிடச்
சமயம் வருங்காற் சற்றுந் தயங்கார்;
நற்றமிழ் பாடிய சொற்றமிழ்ச் சுந்தரன்
சொற்றிடும் பாடலிற் சொக்கிய சொக்கன்
தோழமை தந்தும் துணைபல புரிந்தும்
வாழும் வகைஎலாம் வழங்கினன் என்பர்;
அடிகளும் என்பால் அரும்பிய பாடலின்
அடிகளில் மயங்கினர் அன்புறு தோழமை
தந்தென துளத்தைக் கொண்டனர் தமிழ்முனி;
குன்றைச் சூழ்ந்துள **குன்றக் குடி**யில்
ஒன்றிய திருமடம் உறைதரும் **அடிகள்**
நன்றிவண் வாழ்கென நலமிகு நெஞ்சே
சென்றுரை அவர்பால் சேவடி பணிந்தே.

# வாழிய மனித நேயம்

**2–2–1996**

தொழத்தகு சுந்தரன் தோழமைச் சூரியன்
பழுத்த பாவலன் பாரோர் போற்றும்
வலிய தொண்டன் வஞ்சமில் நெஞ்சம்
மெலிபிறை சூடிய மேன்மைக் கொடைஞன்
கண்ணுதற் பெருமான் கருத்தும் பிணைந்தது
பண்ணுறத் தோய்ந்த பைந்தமிழ் ஒன்றால்;

அதுபோல்,
**குன்றக் குடி**யிற் குடியமர்ந் ததுமுதல்
என்றன் செந்தமிழ்ப் பாட்டால் இணைந்தவர்
ஈடுபட் டென்னைக் ○**‘கவியர’ சென்**றனர்,
பீடுடை **அடிகள்** பெயருக் கேற்றவர்
நாடுயர் வழிகள் நல்கிய பெருமகன்,
மண்ணிற் புழுவென மடியாது மாந்தர்
மண்ணில் நிமிர்ந்து வாழச் சொன்னவர்,
எளியோர்க் கிரங்கும் இளகிய நெஞ்சர்,
எளிமையும் வறுமையும் இருப்பதை நாடார்,
உழைப்போன் வயிற்றில் உறுபசி வந்து
வளைத்து வாட்டி வருவது தாளார்,
ஆலயம்பதி னாயிரம் எழுப் புவதின்
மேலாம் கல்விச் சாலை எழுப்புதல்
எனப்பறை சாற்றும் இயல்பினர், தொழில்கள்

---

*○ 1966–ஆம் ஆண்டு, பறம்பு மலையில் நடைபெற்ற ‘பாரி விழா’வில் ‘கவியரசு’ என்ற பட்டத்தைக் குன்றக்குடி அடிகளார் வழங்கிச் சிறப்பித்தார்.*

வனப்புறக் கண்டவர் வளர்த்தும் வந்தவர்,
பண்டித நேருடன் பழகிய பண்பினர்,
பண்டைய கொள்கை பகுத்துணர் பெரியார்,
தொடர்பும் பொதுமையும் மலரும் தோட்டம்,
அடரும் பகைமை அண்டாக் கோட்டை,
ஏற்றத் தாழ்வுகள் இல்லாப் புதுமை,

சாற்றத் துடிக்கும் சமநிலைப் பாசறை,
கலகமில் உலகம் காணத் துடிக்கும்
உலக அமைதிக் குழைக்கும் வெண்புறா,
இனைய நலன்கள் விளையும் நோக்குடன்
புனையும் துறவு பூண்டவர், அடிகள்
மண்ணும் மனிதரும் என்னுந் தலைப்பில்
எண்ணி யெழுதினர் விகடன் இதழில்;
நம்கயல் தினகரன் நாடித் தொகுத்து
என்மனம் களிக்க ஈந்தனர் நூலென;
வாழ்க வாழ்க மனித நேயம்,
வாழ்க தமிழகம் வாழிய உலகே!

# பழமை வேண்டான்!

பாண்டியனை நினைப்பூட்டும் பார்வையாளன்
பாழான பழமை வேண்டான்!
மாண்டநல்ல சங்கத்தார் தமைப்போல்வான்
மனத்தில்எழும் புதுக்க ருத்தை
வேண்டியமட் டுங்கொடுப்பான்! வீரத்தை
ஊட்டிடுவான்; ஊழிக் காலம்
தாண்டியநல் தமிழ்மொழியால்! மீசையின்மேல்
தணியாத காதல் கொண்டான்!

இனிஅஞ்சார் தமிழ்மக்கள்; தமிழுக்கோர்
இடுக்கண்இனி வருதல் இல்லை!
கனிமொழியில், காதலைத்தான் பகுத்தறிவுக்
கதிரைத்தான் காட்டி விட்டார்!
நனிமகிழ்ந்து தமிழரெலாம் போற்றுகிறார்
நம்மினத்தார் விளங்கப் பாண்டி
இனிதளித்த பரிசில்வன் எதிர்ப்பஞ்சா
இயற்கவிஞன் ஏறு போல்வான்!

கடவுளரைப் பாடிமகிழ்ந்த ததன்பிறகு
காலத்தை எதிர்த்து நின்று,
மடமையினை மாய்த்திட்டான் பாரதியின்
தாசனென மதிப்பும் பெற்றான்!
திடமுடனே அவன்கருத்தைச் செப்புகிறான்;
தீந்தமிழின் உரிமை காக்க
உடல்கொடுப்பேன் என்கின்றான்! அவனளிக்கும்
ஒவியங்கள் வாழ்க நன்றே!

# தொடர்வோம் தொண்டு

மூவாத் தமிழுணர் மு.வ. தமக்குச்
சாவா? அச்சொலைச் சற்றும் நம்பிலோம்;
விடிந்தது பொழுது தொடர்ந்தது செய்தி;
படர்ந்தது துயரம்; நடந்தது கொடுமை!
சரியா மனத்தர் சரிந்தனர் எனுஞ்சொல்
சரியா? பிழைபிழை; சாவே பிழைபல
புரியா நின்றனை புரியா மதியால்;
பெரியார் அறிஞர் பெரும்புல வோர்கள்
எவரே யாகினும் எழும்நின் பசிக்குத்
தவறார் கொல்லோ தடுப்பே இலையோ?
ஆம்ஆம் இயற்கையின் ஆற்றலை அறிவோம்;
அறிவோம் ஆகினும் ஆற்றாத் துயரால்
சிறிதே மறந்தனம் சிந்தையும் மயங்கினம்
உயிர்தான் பிரிந்தது; உடல்தான் மறைந்தது;
செயலும் செயலால் செழித்தநற் றமிழும்
உண்டிவன் அன்றோ? ஒண்மையர் அவர்தம்
தொண்டினை இன்னே தொடருதும் யாமே.

# புதுக்கோட்டைக் காந்தி

(**அண்ணல் சுப்பிரமணியனார்**க்குப் புதுக்கோட்டைக் காந்தி நகர் மக்கள் 17.10.1970-இல் நடத்திய பாராட்டு விழாவில் அம்மக்கள் பாடுவதாக அமைக்கப்பட்ட பாடல்)

கற்றுணர்ந்த மேலவனே, கற்ற வற்றைக்
கடைப்பிடித்து வாழ்பவனே, கவிஞர் தம்மை
முற்றுணர்ந்த புலவர்தமைச் சாவா வண்ணம்
முன்னின்று காத்தவனே, எங்கள் தந்தாய்,
உற்றவரும் மற்றவரும் அண்ணா என்றே
உரிமையுடன் அழைக்கின்ற அண்ணால், எங்கள்
சுற்றமெலாம் வாழ்விக்க வந்த கோவே
**சுப்ரமண்யப்** பெயரோய் நீ வாழ்க நன்றே.

பிறப்பெடுத்த மாந்தரிலே பலரும் தம்மைப்
பேணுதற்கே வாழ்கின்றார்; சிலர்தாம் என்றும்
மறப்பதற்கு முடியாத வண்ணம் வாழ்வை
மற்றவர்க்கும் பயன்படுத்தி வாழ்ந்து நிற்பார்
சிறப்புடுத்த இவ்வாழ்வை நின்பாற் கண்டோம்;
சீரியனே பயன்கருதாத் தொண்டுக் கென்றே
சுரப்பெடுக்கும் அருளுளத்தால் வாழ்ந்து நிற்கும்
தோன்றல்நினக் கெவ்வாறு நன்றி சொல்வோம்?

மழைபொழிந்து பார்புரக்கும் முகில்த னக்கு
மாநிலத்தார் எவ்வாறு நன்றி சொல்வர்?
விழைவெழுந்து பாலூட்டும் தாய்க்கு நன்றி
விளம்பிடஓர் சொல்லுண்டோ? எளியேம் எம்மை
விழிதிறந்து வாழ்வுக்கு வழிதி றந்து
வீறுபெற உய்வித்தோய் நினக்கு நன்றி
மொழிவதற்கும் மொழிகாணேம்; எங்கள் நெஞ்சால்
முப்பொழுதும் தொழுவதன்றி வழியுங் காணேம்.

பொறியியலில் வல்லவரை, வானில் நீரில்
போர்புரியும் படைஞர்தமை, அறிவு நல்கி
நெறியியக்கும் பல்வகைய ஆசான் மாரை,
நெஞ்சிரங்கும் மருத்துவரைப் புலவர்தம்மைப்
பெரியவனே எம்மிடையில் தோற்று வித்தாய்!
பிள்ளையென எம்மையெலாம் வளர்த்து வந்தாய்!
வறுமையிருட் படுகுழியில் கிடந்த எம்மை
வாழ்விக்க வரும்தலைவா! வணங்கு கின்றோம்.

காந்திநகர் மக்களுக்கு வாழ்வு நல்கக்
கல்விவளர் கழகமென ஒன்று கண்டாய்;
ஈந்துபொருள், ஒளிநல்கி, நூல்கள் நல்கி,
எமக்கெனஓர் ஆசானும்நல்கி, என்றும்
போந்திங்கு மேற்பார்வை இடையீ டின்றிப்
புரிந்துவரும் ஆசிரியப் பெரியோய்! நாங்கள்
காந்தியென நின்னைத்தான் காணு கின்றோம்
கருணைமனம் வாழ்கவென வாழ்த்து கின்றோம்.

# மணிவிழா வாழ்த்து

(திரு. மயிலை. **சீனி. வேங்கடசாமி** அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா - சென்னை 17.3.1961)

சுவைபழுத்த செந்தமிழின் சோலை புக்குச்
சோர்வின்றி ஆர்வமுடன் வாழ்நாள் எல்லாம்
நவைதவிர்த்த ஆய்வுரைகள் நல்கி வாழும்
நலம்பழுத்த தமிழ்பழுத்த நல்லோய்! இந்த
அவையகத்தில் புலம்பழுத்தோர் பலரும் வாழ்த்த
அவர்குழுவில் எனையுமுடன் கூட்டு வித்தார்
கவிதொடுத்து வாழ்த்துகின்றேன் அறுபான் ஆண்டு
கண்டோய்! நின் புகழ்வாழ்க வாழ்க என்றே.

பொருள்கருதிப் புகழ்கருதி எழுத்து வேந்தர்
புல்லியமென் காகிதத்தால் வண்ணப் பூக்கள்
இருள்பெருகப் படைத்துவரல் காணு கின்றோம்;
இவைவிரும்பும் சுரும்பினமாய் மாந்தர் மொய்த்து
மருள்பெருகிச் சுழலுகின்றார் அந்தோ! இந்நாள்
வண்டமிழின் நலங்கருதி நுண்பு லத்தால்
தெருளறிவு மணமலர்கள் நீப டைத்தாய்!
திறங்கண்டு மனங்கொண்டு வாழ்த்து கின்றேன்

ஒருதுறையில் எவரேனும் வெற்றி காணின்
ஊரிலுளார் அனைவருமே அதனைச் செய்வர்
பிறதுறையை நினைவுகொளார்; ஆனால் நீயோ
பிறர்புகுதாத் தனித்துறையை வகுத்துக் கொண்டு
வருதுறையில் வெற்றியுடன் தமிழ்வ ளர்த்தாய்!
வாகைகொளும் நினைவாழ்த்த வாய்ப்புப் பெற்றேன்
பெருமைமிகக் கொண்டுன்னை வாழ்த்து கின்றேன்.
பெரியோய்நின் திறம்வாழ்க வாழ்க என்றே.

பழகுதற்கு மிகஇனிய பண்பு கொண்டாய்!
பலநூல்கள் யாத்திருக்கும் அறிவு சான்றும்
அழகுதரும் உயர்வுதரும் அடக்கம் கொண்டாய்!
ஆய்ந்துணரும் ஆற்றலினை எடுத்துக் காட்டும்
விழியுடையாய்! எவரிடத்தும் வெறுப்புக் கொள்ளாய்!
வேறுபடு கருத்துக்கும் மதிப்ப ளிப்பாய்
எழிலுடையாய்! தமிழ்வாழ நின்னை வாழ்த்தி
ஏத்துகிறேன் நலமுடன்நீ வாழ்க என்றே

ஆன்றமைந்த பண்பினிக்கும்; வஞ்சம் இன்றி
அன்பளைந்து செப்புகின்ற சொல்லி னிக்கும்;
ஈன்றளித்த ஆய்வுரைசேர் நூல்கள் எல்லாம்
இனித்திருக்கும்; துணையின்றித் தனித்தி ருந்து
சான்றாண்மை பெற்றோய்! நின் உழைப்பி னிக்கும்;
சார்ந்துள்ள புகழினிக்கும்; செயலி னிக்கும்
தோன்றலுன்பால் அத்துணையும் இனிக்கக் கண்டோர்
**சீனிவேங் கடசாமி** என்றார் போலும்!

மலர்தோறும் மலர்தோறும் சென்று வண்டு
மணம்சுவைத்துத் தேன்சுவைத்துச் சேர்த்து வைக்கும்;
பலவாகும் சமயமெலாம் நீபு குந்து
பைந்தமிழை நுழைபுலத்தாற் சேர்த்து வைத்தாய்;
புலர்காலை எழுகதிரோன் உலகுக் கெல்லாம்
பொதுவெனல்போல் வெவ்வேறு சமய மாந்தர்
பலர்சேர்ந்து வாழ்த்துகின்றார்; சமய மில்லேன்
பாமாலை கொண்டுன்னை வாழ்த்து கின்றேன்.

பல்வேறு சமயத்தார், சமயம் இல்லார்,
பன்மொழிகள் கற்றுணர்ந்தார், ஒன்று கற்றார்,
பல்வேறு கட்சியினர், கட்சி சாரார்,
பலபிளவுச் சாதியினர், சாதி வேண்டார்,
எல்லாரும் ஒன்றாகிப் போற்று கின்றார்;
இன்றமிழால் ஒன்றுபடும் காட்சி கண்டேன்;
நல்லோர்தாம் பன்மையினாற் சிதறுண் ணாமல்
நலமிக்க ஒருமையினால் தமிழைக் காப்பர்.

குடியரசு நின்போலும் சான்றோர் தம்மைக்
கொண்டாடி விருதளிக்க மறந்த தேனும்
முடியரசன் நின்பெருமை பாடு கின்றேன்
மூவேந்தர் மரபறிந்து வாழ்த்து கின்றேன்;
மடியின்றிச் சுறுசுறுப்பால் தமிழைத் தேடும்
மாண்பால்அஞ் சிறைத்தும்பி என்று நின்னைப்
படிஅழைக்க விருதளித்தேன்; என்பாற் செல்வம்
பாடலொன்றே அதையளித்தேன் பரிசி லாக.

---

*மடி - சோம்பல், படி - பூமி*

தாய்மொழியைப் பாராட்ட விழையும் மாந்தர்
　　தம்மொழியிற் சான்றோரைப் போற்றல் வேண்டும்
தாய் நாட்டு முதலமைச்சர் மாலை சூட்டத்
　　தகுகல்விப் பொறுப்பேற்ற அமைச்சர் நின்று
வாய்விட்டுப் பாராட்ட நிதிய மைச்சர்
　　வரையாது மனங்குளிர்ந்து பரிசில் நல்கச்
சேய் நாட்டார் வியந்துரைக்க யானை மீது
　　செம்மாந்து செலல்வேண்டும் அந்தச் சான்றோர்.

செம்மாந்து செல்கின்ற காட்சி காணச்
　　சேர்ந்தோடி வருகின்ற மக்கள் கூட்டம்
அம்மாஎன் றதிசயிக்க வேண்டும் என்றன்
　　ஆவல்நிறை வேறுகின்ற நாள்தான் என்றோ?
இம்மாநி லத்திருக்கும் புலவர் என்போர்
　　எல்லாரும் ஒன்றாகி எழுந்தால் உண்டு;
சும்மாஇங் கிருந்ததெலாம் போதும் போதும்
　　சூளுரைத்து நாமெழுதல் வேண்டும் வேண்டும்.

---

*சேய் நாட்டார் - தூர நாட்டவர்அ*

# வாழும் அண்ணாமலை

(அண்ணாமலைப் பல்கலைக் கழக வைரவிழா மலருக்காக)

ஈட்டுவதும் கூட்டுவதும் ஈட்டியதை
வகுப்பதுவும் இயல்பாற் செய்து
காட்டிய**அண் ணாமலைமன்** கருணையொடு
வாழ்ந்திருந்த கால மெல்லாம்
வேட்டெழுந்து தமிழ்மொழிக்கும் விளைபயனாம்
கல்விக்கும் வேண்டும் மட்டும்
நீட்டியதை நாடறியும் நிறைபுலவோர்
ஏடறியும் நெஞ்சும் சொல்லும்

நெருஞ்சிபடர் வேட்களத்தை நிலமாக்கி,
நகராக்கி, நிலைத்து நிற்க
அருங்கலைகள் பலகெழுமும் கழகமென
ஒருகோவில் ஆக்கி வைத்து
வரும்பொருளை அதுவளர வகுத்தளித்த
கையானை வைய மெல்லாம்
தரும்புகழாற் பொலிவானை தனியண்ணா
மலையானைத் தலைக்கொள் வோமே.

கலைமலிந்த தில்லையிலே கற்கோவில்
 தமிழரசன் கண்டான் அன்று;
கலைபலவும் திகழ்கின்ற கலைக்கோவில்
 ஒன்றின்று கண்டான் அண்ணா
மலையரசன்; அதுகண்டு கூத்தரசன்
 மனங்களித்து மன்றில் நின்று
கலையறிய ஆடுகிறான் என்றகவி
 மணிமொழியைக் கருத்தில் வைப்பாம்.

நிலையாத உலகத்தில் நிலைத்தசெயல்
 செய்தமையால் நெஞ்சந் தோறும்
சிலையாக நிற்கின்றான் சித்திரமாத்
 தோன்றுகின்றான் செழுமை கொண்ட
மலையாக வாழ்கின்றான் கலையாக
 வளர்கின்றான் மனத்துள் எண்ண
அலையாக அசைகின்றான் அரியணையா
 நம்முளத்தை ஆக்கிக் கொண்டான்.

அரங்கிருக்கும் கடமிருக்கும் அருகிலிசைக்
 கருவியெலாம் அமைந்தி ருக்கும்
சுரமிருக்கும் தோற்கருவி துணையிருக்கும்
 குழுவொன்று சூழ்ந்தி ருக்கும்
நரம்பிழுக்க மூச்சடக்கி நடுவிருந்து
 பாடுபவர் நாவ சைத்தால்
கரகரத்த குரலிருக்கும் தமிழ்மட்டும்
 அங்கிருக்கக் கண்ட தில்லை.

தமிழ்நாட்டில் தமிழ்த்தெருவில் தமிழரிடை
இசையரங்கில் தமிழை நீக்கித்
திமிர்காட்டும் மனமுடையர் தேர்ந்தெடுத்துப்
பிறமொழியைத் திணிக்குங் காலை
சுமைதாங்கிக் கல்லாகச் சூடில்லாச்
சிலையாகச் சோர்ந்து நின்றோம்
அமிழ்தூட்டும் தமிழெங்கே? எனஅதட்ட
அறியாத ஆமை யானோம்.

அன்றுநமக் குணர்வூட்டி, ஆர்ப்பரிக்க
வழிகாட்டி, அறிவா னாய்ந்து
நின்றுநமை நெறிப்படுத்தி, நிலைத்திருந்த
வசைநீக்கி, நிமிர்ந்து நிற்கக்
குன்றெனவே நின்றானைக் குய்யமதை
வென்றானைக் கூடிப் பாடி
இன்றுமிவன் வாழ்வானை என்றுமுள
தென்றமிழால் ஏத்தி நிற்போம்.

---

*குய்யம் - வஞ்சனை*

# தமிழ்க் கடல்

**16–9–1973**

பச்சைமா மலைமுகட்டில் ஆழ்வார் பெய்த
பாடல்நா லாயிரமும் செந்தேன் ஆறு;
மச்சவுரு மாலவனும் அயனும் அண்ணா
மலைவாழும் சிவமலையில் மூவர் பெய்த
மெச்சுமிசைத் தேவாரம் தீம்பா லாறு;
மேலவர்வாழ் குன்றத்தூர்ப் பெருமான் பெய்த
இச்சைமிகும் திருதொண்டர் பெருமை பேசும்
எழில்மிகுந்த வரலாறும் ஒருபே ராறு.

அவனடியைத் தொழுதுருகும் வாச கந்தான்
அழுதழுது பொழிந்துவைத்த கண்ணீர் ஆறாம்;
எவனடியால் உலகளந்தான் அவன்றன் காதை
இயம்புமநூல் உயிராறாம்; பயில்வார் நெஞ்சைக்
கவருமுலா தூதுபிள்ளைத் தமிழோ டின்னும்
கலம்பகங்கள் சிற்றாறாம்; இவ்வா றெல்லாம்
தவறாது மனம்புகுந்து பொங்கி யோங்கும்
தமிழ்க்கடலே நம்**இராய சொக்க லிங்கம்.**

